## இராமலிங்க அபயம் துணை

## முன்னுரை

அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்திருந்த உலகரனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து அடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திடுதற்கென்றே எனை இந்த
யுகத்தே இறைவன் வருவிக்கவுற்றேன் அருளைப் பெற்றேனே.
(திருவருட்பா 5485)

இறைவனால் வருவிக்கவுற்ற திருவருட்பிரகாச வள்ளலார் இறைவனைப் பற்றிய உண்மையையும், இறை அருளைப் பெறுதற்குரிய உண்மை வழியையும், மனிதன் முடிவாக அடைய வேண்டிய உண்மை நிலையையும் தாம் அருளிய திருவருட்பாவில் மிக மிக எளிமையான முறையில் எல்லோரும் புரிந்து கொள்ளுமாறு விளக்கிக் காட்டியுள்ளார்.

ஜாதி, மதம், சமயம் முதலியனவெல்லாம் பொய்யென்று சாடிய வள்ளலார், ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமையுடைய சகோதரர்களாக அனைவரும் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்று அறிவுரை கூறினார். அனைவரும் ஜாதி, மத, சமய வேறுபாடின்றி ஒன்று கூடி உண்மைகளை அறிந்து கொள்ளச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் ஒன்றினை நிறுவினார். சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்து கடவுளின் உண்மையை உணர்வதோடு மட்டுமின்றி ஆண்டவனின் அருளை எளிதில் பெறுகின்ற வழியை அறிந்து கொண்டவர்கள் மனித வாழ்வின் முடிந்த முடிபான மரணமிலாப் பெருவாழ்வையும் பெறுவராதலினால், அச் சங்கத்தைச் சார்ந்தவர்கள் வேறொன்றை நாடிச் சென்று பொய்யுலகை நம்பி ஏமாந்து போகாதீர்கள் என்றும் இரக்கத்தால் எடுத்துரைக்கின்றார்.

ஆடாதீர் சற்றும் அசையாதீர் வேறொன்றை
நாடாதீர் பொய்யுலகை நம்பாதீர் - வாடாதீர்
சன்மார்க்க சங்கத்தைச் சார்வீர் விரைந்தினி இங்கு
என் மார்க்கமும் ஒன்றாமே. (திருவருட்பா 5527)

ஜீவ காருண்யம் ஒன்றினால் மட்டுமே இறையருளைப் பெறமுடியும் என்று கூறிய வள்ளலார் அந்த உண்மையை உலகில்

என்றென்றும் நிலைநாட்ட வடலூரில் சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை ஒன்றினைத் துவக்கினார். தமது பன்னிரண்டாவது வயதில் தொடங்கிய தவத்தின் முடிவான பலனை அந்தத் தருமச் சாலையிலே அடைந்ததாகவும் கூறினார். 1867ம் ஆண்டு மே மாதம் 23ம் நாள் வள்ளலாரால் மூட்டப்பட்ட அடுப்பானது திருவருள் வல்லபத்தால் இன்றும் எரிந்து கொண்டு அங்கே வரும் ஏழைகளின் பசியாற்றி வருவதைக் கண்கூடாகக் காணுகின்றோம். ஜீவ காருண்யமே தெய்வ வழிபாடு என்று எடுத்துக் காட்டியவர் வள்ளலார். ஜாதி மதம் சமயம் முதலியவை பொய்யென்று சாடி, ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை மூலம் அனைவரையும் ஒன்றுபட்டு வாழ வழிகூறிய வள்ளலாரே புலால் உண்பவர்களைப் புறவினத்தார் என்றும், மாமிச உணவை மறுத்தவர்களை அகவினத்தார் எனவும் பிரித்தார். புலால் உண்ணும் மனிதரைக் கண்டு உள் நடுங்கி ஆற்றாமல் என்பெலாம் கருக இளைத்தனன் என்று கூறுகிறார். ஓர் ஆணைப் பெண்ணாக்கி, அந்தப் பெண்ணை மறு கணத்திலேயே மீண்டும் ஆணாக்கி, இறந்த பிரேதத்திற்கு உயிர் கொடுக்கும் அளவு ஆற்றல் (சித்து) பெற்றவராயினும் மனதில் இரக்கம் இல்லாது ஒரு ஜீவனை வதைத்து அதன் மாமிசத்தை உண்ணும் எண்ணம் இருக்குமேயானால் அவனை ஞானி எனக் கூற வேண்டாம் என்று கூறி ஞானிகட்கு ஒரு புதிய இலக்கணமே வகுக்கின்றார்.

மருவாணைப் பெண்ணாக்கி ஒரு கணத்தில் கண் விழித்து
வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி இறந்தவரை எழுப்புகின்ற உருவனேனும்
கருவாணையுற இரங்காது உயிருடம்பைக் கடிந்து உண்ணும்
கருத்தனேல் எங்
குருவாணை எமது சிவக்கொழுந்தாணை ஞானி எனக்கூறொணாதே
(திருவருட்பா 3027)

இறைவனின் உண்மையை எடுத்துக் காட்டவும் எல்லோரும் ஞான அனுபவம் பெற்று மரணமிலாப் பெருவாழ்வடையவும் வடலூரில் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபை ஒன்றினை 1872ம் ஆண்டு நிறுவினார். எண்கோண உருவ அமைப்பைக் கொண்ட இந்த ஞானசபை உலகில் வேறெங்கும் காண முடியாததும் எல்லாச் சமயத்தவரும் வந்து வணங்கக்கூடிய ஒரு பொதுவான ஆலயமும்

ஆகும். இந்த ஞானசபை 25-1-1872 அன்று வழிபாட்டுக்காகத் திறந்து வைக்கப்பட்டது.

இந்த ஞானசபையில் எழுந்தருளப் பெற்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரைத் துதிக்கும் வகையில் 1596 வரிகள் கொண்ட அகவல் ஒன்றினை 11-4-1872 அன்று இயற்றி அருளினார். சன்மார்க்கத்தின் வேதமாக இந்த அகவல் அனைவராலும் போற்றப்பட்டு வருகின்றது. அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரை நான்கு முறை விளித்து ஆரம்பிக்கப்படும் அகவல் அதேபோல முடிவிலும் நான்கு முறை விளித்து முடிக்கப்படுகிறது.

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் அகரவரிசையில் முதலில் தொடங்கப்படுகிறது. முதல் 336 வரிகள் இந்த அகவலுக்கு முன்னுரையாக அமைந்துள்ளது எனக் கூறலாம். 367வது வரியிலிருந்து தொடங்கும் 30 வரிகள் பஞ்ச பூத விரிவின் முன்னுரையாக அமைந்துள்ளது.

இறைவனை அருட்பெருஞ்ஜோதி என அழைத்த வள்ளலார் இந்த அகவலில் பொருளே, சிவமே, சிவபதியே, குருவே, தாயே, தந்தையே, துணையே, நட்பே, உறவே, சத்தே, சித்தே, இன்பே, மணியே, மந்திரமே, மருந்தே, பொன்னே, நிதியே, மலையே, கடலே, விளக்கே, மதியே, மழையே, செஞ்சுடரே, கனலே என்றெல்லாம் அழைத்து ஆனந்தமடைந்து முடிவாக ஆரம்பித்தது போன்றே அருட்பெருஞ்ஜோதி என்று அழைத்து முடிக்கின்றார்.

பிரார்த்தனை மட்டுமின்றித் தனது அருள் அனுபவங்களையும் இந்த அகவலில் வெளிப்படுத்துகின்றார். எதையும் பொருள்புரிந்து படித்தால் மட்டுமே அதன் பயனை முழுமையாக அனுபவிக்க முடியும். திண்டுக்கல் சரவணானந்தா சுவாமிகள், உரை வேந்தர் ஔவை துரைசாமி பிள்ளை அவர்கள், தத்துவப் பேராசிரியர் வை. இரத்தின சபாபதி அவர்கள் போன்றோர் உரை எழுதியுள்ளனர். வள்ளலாரே உரை எழுதினால் மட்டுமே உண்மையான உரை வெளிப்படும். அதுவரை அரும்பு, மலர், காய், கனி போல் அவரவர் அனுபவம், அறிவுக் கேற்பவே உரை காண இயலும்.

கற்றோர் மட்டுமின்றி கல்லாதாரையும் ஆசீர்வதிக்கும் நம் பெருமானார் நல்லருள் துணையால் இந்த உரையும் அரும்பாக வருகின்றது. வந்தனம்.

சில இடங்களில் முன்னால் ஆதாரமாகக் கூறப்பட்ட பாடலே பின்னாலும் காட்டப்பட்டுள்ளது. வாசகர்களின் நேரத்தின் அருமை கருதி முன் வரிகளில் காண்க எனக் கூறாமல் பொருத்தம் கருதி மீண்டும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

அருட்பெருஞ்ஜோதி அகவல் அகர வரிசையில் தொடங்கு கின்றது. ஆயுத எழுத்தாகிய ∴ வர வேண்டிய இடத்தில் திருநிலை என்ற ஒரு சொல்லை அமைத்திருப்பது, ஆய்வுக் குரியது. திருஅருட்பாவில் ஒரு சொல்லுக்குப் பொருள் திருஅருட்பாவிலேயே காண வேண்டும். திருநிலை என்பது எதைக் குறிக்கின்றது? என்ன பொருள்? வாரீர் சிதம்பரவல்லி என்ற கீர்த்தனையிலும் அகவலைப் போன்றே அகர வரிசையில் கண்ணிகள் அமைக்கப்பட்டுள்ளன. அங்கும் "ஔ"விற்குப் பின் "கண்ணனையீர்" என்று தொடங்குகின்றார். முகத்திரண்டு கண்களுடன் நுதற்கண்ணையும் சேர்த்தால் ஆயுத எழுத்தாகிறது (∴). இந்த மூன்று புள்ளிகளையும் ஒன்று சேர்த்தால் Ω மாடம் ஆகின்றது. இதையே புருவ மையம் என்றும், சிற்சபை, மகாமேரு, லலாடம், முச்சந்தி, முப்பாழ் என்றெல்லாம் குறிப்பிடுகின்றார்கள். திருநிலை என்பது சிற்சபை என்பதுதான் என விளங்குகின்றது.

முதல் 336 வரிகளை அகவலின் முன்னுரையாகக் கொள்ள முடிகிறது. அகவலின் கடைசி வரியில் உலகினில் உயிர்களுக்குறும் இடையூறெலாம் விலக என்று கூறியுள்ளது போல் 336வது வரியில் உலகெலாம் பரவ என் உள்ளத்திருந்தே அலகிலா ஒளி செய் அருட்பெருஞ்ஜோதி என்கிறார்.

தான் ஓதாது உணர்ந்ததை 23, 24 வரிகளில் உறுதிப்படுத்துகின்றார். 102வது வரியில் மரணத்தை நீக்கக்கூடியது சிற்சபையே என்று அறிவிக்கின்றார். 115வது வரியிலிருந்து 126வது வரிகள் வரையுள்ள தொடர்பு மிகவும் ஆய்வுக்குரியது. திட தேகமும் போகமும் அடியருக்குக் கிடைக்கும் என்று 182வது வரியில் கூறிய நம்பெருமானார் அடுத்த வரியில் துரிய சுகம் அன்பருக்கே

கிடைக்கும் என்கிறார். அடியாருக்கும் அன்பருக்கும் உள்ள வேறுபாட்டை அவசியம் அறிந்து கொள்ள வேண்டும்.

கரும சித்தி, யோக சித்தி, ஞான சித்தி என்று வகைப்படுத்தியதுடன் சித்தி என்பது நிலைசேர்ந்த அனுபவம் என்றும் முத்தி என்பது நிலை முன் உறு சாதனம் என்றும் விளக்குகின்றார்.

நம் பெருமானார் நாவிலே நல் அமுதத்தையும், அவரது கைகளில், இல்லை, என்னாது எதையும் வழங்கக்கூடிய கற்பகத்தையும், அவரது கண்களிலே கதிர் நலத்தையும், அவரது அறிவிலே அருள் ஒளியையும், அவரது மனதிலே பரை ஒளியையும் அளித்ததுடன் எல்லாச் சத்திகளும் விளங்கும் ஆற்றலையும் இறைவன் அளித்ததை வெளிப்படுத்தி அவரை வணங்குகின்றோர் என்ன பேறு பெற்றவரோ என மலைக்க வைக்கிறார்.

பிரிவின்றித் தன்னுடன் இறைவன் கலந்ததையும், இந்த உலகில் எதைக் கண்டும் அஞ்ச வேண்டாம் என்று இறைவன் அபயம் அளித்ததையும் வெளிப்படுத்துகின்றார். அடுத்த வரியில் மாண்டு உழலாவகை தன்னை இளவயதிலேயே இறைவன் ஆட்கொண்டதை வெளிப்படுத்துகின்றார்.

பற்றுகள் அனைத்தினையும் பற்றறத் தவிர்த்தேன், சமயம் குலம் முதலிய சார்புகளையும் விட்டு விட்டேன் என்கிறார்.

> நோவாது நோன்பு எனைப் போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
> சாவா வரம் எனைப் போல் சார்ந்தவரும் - தேவா நின்
> பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில்
> யாருளர் நீ சற்றே அறை. (திருவருட்பா 5624)

என்று ஒரு பாடலில் ஆண்டவனை வினவுகின்றார். அதற்கு இறைவன் என்ன பதில் அளித்தான் என்பதை 298வது வரியில் விளக்குகின்றார். என்னைப் போல் பெற்றவர் வேறு யாரேனும் உண்டா என்று வள்ளலார் கேட்டதற்கு உன்னைத் தவிர வேறு யாரும் எனக்கு இல்லை என்று ஆண்டவன் பதிலளித்ததோடு நில்லாமல் எல்லாம் வல்ல சித்தையும் அளித்தானாம்.

**எல்லாம் வல்ல சித்தெனக் களித்து எனக்குனை அல்லாதிலையெனும் அருட்பெருஞ்ஜோதி.** (அகவல் 298)

சோதிப்பது இறைவனுக்கு வழக்கம். என்னைப் போய் சோதிக்கலாமா? என்னைப் பார்த்து இரக்கப்பட்டு ஐயோ பாவம் என்று உன் அருளைக் கொடு என்று வேண்டுகின்ற நயம் எண்ணி எண்ணி இன்புறக்கூடியது.

உன்னுடைய புகழ் உலகெலாம் பரவ என் உள்ளத்திலே இருந்து குறைவுபடாது ஒளி தருவாயாக என்று வேண்டுகின்றார்.

அகவலில் உள்ள நயங்கள் இனி ஆங்காங்கே இயன்றவரை பார்க்கலாம்.

உலகினில் உயிர்கட்கு உறும் இடையூறெலாம் விலக நீ அடைந்து விலக்குக மகிழ்க எனத் தனக்கு இறைவன் ஆணையிட்டதாக அறிவிக்கிறார். இறைவன் ஆணை அதுவானால் நாம் என்ன செய்ய வேண்டும்? நம்முடைய குறைகளை வள்ளலாரிடமல்லவா கூறிப் பிரார்த்தனை செய்ய வேண்டும். அப்போதுதானே ஆண்டவனின் கட்டளைப்படி வள்ளலார் நம் குறைகளை நீக்குவார். நம்முடைய குறைகள் நீங்க இதுவே வழி - சிறந்த வழி - இரக்கமே உருவான வள்ளலார் சோதனை எதுவும் செய்யாமல் நாம் செய்யும் தவறுகளைப் பொருட்படுத்தாது அன்னைபோல் அருளை ஊட்டுவார்.

இந்தப் புத்தகம் வெளிவர வேண்டும் என்ற தீராத ஆவலில் தன் சக்திக்கும் மீறிப் பொருளுதவி புரிந்த அனைவர்க்கும் நம் பெருமானாரின் நல்லருள் துணை நிற்பதாக.

வாழ்த்துரை அனுப்பி வைத்த தவத்திரு குங்கிலியம் சுவாமிகட்கும் எனது பணிவான வந்தனங்கள்.

இப்புத்தகம் அச்சாவதற்கு நல்ல முறையில் பொறுமையுடன் D.T.P. செய்த திரு. சுகந்தராஜன் அவர்கட்கும், சிறந்த முறையில் அச்சிட்ட சிவா அச்சக உரிமையாளர் திரு. D. தட்சிணாமூர்த்தி அவர்கட்கும் எனது இதயங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இந்தப் புத்தகத்தை நம் பெருமானாரின் திருவடிகட்குச் சமர்ப்பிக்கின்றேன்.

**வாழ்க வள்ளளலார் அருள்.**

**மு. பாலு**

அருட்பெருஞ்ஜோதி ! அருட்பெருஞ்ஜோதி !
தனிப்பெருங்கருணை ! அருட்பெருஞ்ஜோதி !

y

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க !

## வள்ளலார் அறநிலையம்

ஞானாசிரியர்
சாது குங்கிலியம்
**பழ. சண்முகனார்,**
வள்ளலார் அறநிலையம்
பெண்ணாடம்-606 105

தேதி 09-01-1999

இராமலிங்க குருராயர் பொன்னடி
இவன் புன் முடி மேல் !

### அணிந்துரை

திருவருட்பிரகாச வள்ளல் பெருமானார் திருவாய் மலர்ந்த 1596 வரிகள் கொண்ட அருட்பெருஞ்ஜோதி அகவல் பொதுவாகத் தமிழ்ச் சான்றோர்களுக்கும் சிறப்பாகச் சன்மார்க்கிகளுக்கும் உயிர்நாடி போன்றது.

திருவருட்பா ஆறு திருமுறைகளையும் ஒரு உடம்பாக உருவகம் செய்தால் " அகவல் " தலைப் பகுதியாகும். அருட்பாவின் சாராம்சமும் திருஅகவல்தான். புராண இதிகாசக் கருத்துக்கள் அணுவளவும் இல்லாமல் விஞ்ஞானக் கருத்துக்களை இம்மியும் விடாது திருவாய் மலர்ந்ததாகும்.

அகவல் உரை காண்பது கல்வியறிவினால் மட்டும் இயலாது. படிப்பறிவு பாதிக் கிணறு தாண்டியதாகவே முடியும். அருள் துணையின்றி அகவலைத் தீண்ட முடியாது. எவ்வளவுக்கெவ்வளவு எளிமையான பகுதிகள் உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு அருமையான

அனுபவ அறிவு இல்லாமல் நெருங்க முடியாத பகுதிகளும் மிக மிக உள்ளன.

ஒரு பானை சோற்றுக்கு ஒரு "சோறு" பதம் பார்த்தாலே போதுமானது போல

புறநடுவொடு கடை புனர்ப்பித்து ஒருமுதல்
அறமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி (513 வரி)

என்ற வரியின் உரையை இங்கு மீண்டும் சொல்ல வேண்டுமென்பதில்லை. நூலின் உள்ளே அகவல் உரையை பார்த்து படித்துப் புரிந்து, உணர்ந்து மகிழ வேண்டுகிறேன். இந்த உரை நான்கைந்து வருடமாகவே 'சத்விசார' வடலூர் கூட்டத்தில் தெளிவாக பலருடைய கேள்விகளுக்கு பதிலாக ஐயம் திரிபறக் காணப்பட்டது அகவல் உரை வெளி வர பல நாள் காணும் என கூறப்பட்டது. இந்த உரை இப்போது வெளிவருவது விரைவு என்றே சொல்லலாம். வள்ளல் பெருமான் துணையின்றி எழுதப்பெறாது அச்சு ஏறவும் முடியாது. வள்ளல் பெருமானைத் தவிர வேறு தெய்வம் ஒன்று கூட திரு. மு.பா. அவர்களுக்கு இல்லை. இவருடைய முழுப் பெயர் மு. பாலசுப்பிரமணியம் என்பதைச் சுருங்கச் சொல்லி 'மு.பா.' என்றும் 'சந்நிதானம்' என்றும் அழைப்பதுண்டு. அருட்பாவிற்கு உரை சொல்ல முயன்றால் வேறு நூலைப் பார்த்து சொல்ல முடியாது. அருட்பாவிலேயே திளைத்தால் ஓரிடத்தில் பதில் கிடைத்துவிடும். பூட்டும் சாவியும் அருட்பாவிலேயே உள்ளது. சந்நிதானத்திற்கு ஒரு திருக்கூட்டமே உள்ளது. வாழயடி வாழையென வந்த திருக்கூட்ட என்ற வரியில் திருக்கூட்டத்திற்கு உரை காண எப்படி "தம்மை மறந்து அருளமுதம் உண்டு தேக்கும்" என்ற மகாதேவ மாலை பாடலில் வரும் திருக்கூட்டம் என்ற சொல் நமக்குக் கைகொடுத்து தெளிவு செய்கிறதோ அப்படி இவருடைய உரையிலே ஆழ்ந்து ஆழ்ந்து முழுகினால் அருமையான முத்துக்கள் குளிக்கலாம்.

மு.பா. அவர்கள் மிகவும் அடக்கமானவர்கள். தைப்பூச விழாவிற்குச் சென்னையில் இருந்து தொடர்ந்து 20 ஆண்டுகளாகப் பாத யாத்திரையாக வடலூருக்கு நடை போடுகிறார். இதில் பல அனுபவம் உள்ள திருக்கூட்டத்தாரும் உண்டு. சில ஆண்டுகளுக்கு

முன் ஒருமுறை சென்னையில் இக்கூட்டத்தை தொடங்கி வைத்தும் மற்றொரு முறை பண்ருட்டியில் எதிர்கொண்டு அழைத்தும் மகிழ்ந்ததுண்டு.

துணிந்து எனக்கும் கருணை செய்த துரையே என்று பணிந்தறியேன் எனத் தொடங்கும் பாடலில் கூறியபடி திரு. மு.பா. அவர்களுக்குத் துணிந்து தான் உள்ளபடி இந்த உரையை எழுதும் துணிச்சலைத் தந்து பெரும் துணையாய் இருந்ததால் நூலின் உரை ஆங்காங்கே மின்னல் தந்து பளிச்சிடுகிறது.

நூலாசிரியரைத் தெரியாத சன்மார்க்கிகள் இல்லை. வள்ளல் அருள் கடலில் நித்தமும் நிமிடமும் நீராடும் பெற்றியார்.

**வெண்பா**

மூப்பா. என வழங்கும் மூதறிஞர் சன்மார்க்கி
சாப்பாடு போடுமிச் சால்புரை - தோப்பான
மக்கள் அருள் பசிக்கு மா விருந்தே - மக்காள் நீர்
சிக்கனவே கொள்வீர் சிறந்து

**(பழ. சண்முகம்)**